நிலவில்லா வானாய்
இதயம் இருண்டு கிடக்க
நீரில்லா பயிராய்
நெஞ்சம் வாடித் தவிக்க
ஏனடி என்னை
மறந்தாய்?
என் விழிகளிலோ
மாரியின் ஈரம்
என் மொழிகளிலோ
முகாரியின் கோரம்







உன் பார்வைத்தூரத்தில்

நானிருந்தும்

என்னை பாராத துயரம்

உன் மொழிகேட்கும்

தொலைவில்

நானிருந்தும்

தேறுதலாய் ஒரு

மொழியெனும்

கேளாத அவலம்

.



வில்லாய் நிற்கும்
புருவங்களும்
வேலாய் தைக்கும்
விழிகளும்
சொல்லும்
மொழிதான் காதலா?
கள்வடியும்
பூக்களுண்டு
காதல்தேன் வடியும்
பூக்கண்களுமுண்டு
என்பதை
உன்னிடம்தான்
கண்டுகொண்டேன்







Pax Christy

Goodbye to our Angel mother

Mrs. Sebamalai Perinbarajah

You were a precious gift from God above,
so much beauty, grace and love.
You touched our hearts in so many ways,
Your smile so bright even on the bad days.
You heard God's whisper calling you home,
You didn't want to go and leave us alone.
You loved us so much, you held on tight,
till all the strength was gone and you could no longer fight.
He had called your name twice before,
You knew you couldn't make him wait anymore.
So you gave your hand to God and slowly drifted away,
knowing that with our love we will be together again someday.

---

"God's greatest gift returned to God"

"Hallelujah"

"Amma we love you"

WORD became flesh and dwell among us

1927-----



வாழும்போது-நாம்
வாழ்ந்த குடிலையே
கோயிலாக்கிய தெய்வம்
வானகம்போனபின்
தாயின் திருவுடல்
தூங்கிட
அன்பு மகன் கட்டிய
திருகோயிலிது
ஆடி மகிழ்ந்து
அன்னையும்
அமைதியில் உறங்கிட
கட்டிய
சின்னதொட்டிலிது.



துருவங்களைப்போல்
தொலைவில்
இருந்தாலும்
எம்மிருவருக்கும்
காதல் வானம்
ஒன்றே



நிலவில்லா வானாய்
இதயம் இருண்டு கிடக்க
நீரில்லா பயிராய்
நெஞ்சம் வாடித் தவிக்க
ஏனடி என்னை மறந்தாய்?
என் விழிகளிலோ
மாரியின் ஈரம்
என் மொழிகளிலோ
முகாரியின் கோரம்







உன்
பார்வைத்துாரத்தில்
நானிருந்தும்
என்னை பாராத
துயரம்
உன் மொழிகேட்கும்
தொலைவில்
நானிருந்தும்
தேறுதலாய் ஒரு
மொழியெனும்
கேளாத அவலம்
.



வில்லாய் நிற்கும்
புருவங்களும்
வேலாய் தைக்கும்
விழிகளும்
சொல்லும்
மொழிதான் காதலா?
கள்வடியும்
பூக்களுண்டு
காதல்தேன் வடியும்
பூக்கண்களுமுண்டு
என்பதை
உன்னிடம்தான்
கண்டுகொண்டேன்











காதலின் வலியை
நெஞ்சுக்கு
தந்துவிட்டு விட்டு
என் கவிதை
வரிகளை
மட்டும் ஏனடி
எடுத்துச் சென்றாய்?



உன்னை எண்ணும்போது
நெஞ்சுக்குள்
பொங்கும்
பரவசம்
உன் பெயரை
சொல்லும்போது
நாவினில்
இனிக்கும் கனிரசம்







நஞ்சினினால்
வரும் சாவும்
கொஞ்சநேரத்தில்
அழகு நங்கையர்
காதல் நெஞ்சினால்
வரும் சாவோ
வாழும் வரைக்கும்




உனை கண்டதும்
காதல் வந்ததனால்
தெரிந்து கொண்டேன்-
தேன்மொழியே
எனக்கும் இதயம்
உண்டென்று
அதுவம் உனதென்று



நஞ்சுதான் உயிரை
கொல்லுமென்று
அறிந்திருந்தேன்
உன் மேல் கொண்ட
காதலும்
என்னை அனுவணுவாய்
கொல்ல
காதலே- கன்னியரும்
உயிர் கொல்லி பாவை
என்று இப்போது புரிந்து
கொண்டேன்









உனக்காய்
என் இதயம் எழுதிய
காதல் கவிதையை
இசைக்கின்றேன்
புள்ளிக்குயிலே
கேட்பாயா?
இணைந்து பாடாயா?



என் வாழ்வில் -நீ
வந்தபின்
என் வாழ்வும்
வண்ணமயமானதடி
வானவில்லும்
கோலம்போட
நாளும்
வண்ணப்பூமழையும்
பெய்யுதடி



வண்ண நிலவோ
வாச மலரோ
எண்ணமெல்லாம்
நிறைந்த
இன்பத் தேனோ
கன்னமெல்லாம் சிவக்க
காதல் சொன்ன
என் தேவதை





இதழ்களே
இதழ்களில் சக்கி
முக்கி
கந்களாய்
உரசிக்கொள்ள
இதயத்தில்
மூண்டதோ
காதல் தீ





விழியிழந்தபோது
ஒளியாய் வந்தவள்
மொழியிழந்தபோது
இசையாய்
ஒலித்தவள்
தாயை இழந்தபோது
துணையாய்
நின்றவள்
காதல் வந்தபோது
ஊமையாகிப்போன
மாயம்தான்
என்ன?





கண்ணீர் குளங்களை
என் விழிகளில்
கட்டி வைத்து
காதலின் தீராத வலியை
என் நெஞ்சுக்குள்
விட்டு வைத்தாய் ஏனடி?





இன்றும்
என்னுள் இருக்கும்
உன் நினைப்பே
இன்றும் எனை
வாழவைக்கும்
சஞ்சீவினி






புலம்பெயர்ந்த
அகதியைப்போல்
காதலே உனைப்
பிரிந்து
தவிக்குதடி என்
இதயம்





சுடரைத்தாங்கி
உருகும்
மெழுகைப்போல
சுந்தரி
உன் நினைவைத் தாங்கி
உருகுதடி
என் காதல் நெஞ்சு



அனு அனுவாய்
சாவதை அறிந்து
கொள்ளவோ
காதலே எனை
கொல்கிறாய்?







என் உடலில்
உதிரமாய்
ஓடுவதும் உன்
நினைப்புத்தான்
சுவாசமாய்
உலாவுவதும்
காதலே
உன் மூச்சுத்தான





காதல்
பிணியால்
கன்றிச் சிவந்த
என்
செவ்வாயிதழ்
காயம் ஆறிட
முத்தமழை
பெய்யடா
சத்தமின்றி
எனை
கொய்யடா

அன்பே
உன்னிடம் சொல்லிட
என் காதலை தவிர
செய்திகள் ஏதுமில்லை
உன்னோடு-பகிர்ந்திட
என் இதயம் தவிர
என்னிடம் வேறேதுமில்லை






உன் நெஞ்சுக்குள்
என்மீது
ஒரு முறையேனும்
காதல் பூத்திருந்தால்
அந்த காதலுக்கு
என் கவிதை
சமர்ப்பணம்





உன்னை
காணும்போதெல்லாம்
ஒரு பூவைப்போல்
மலர்கின்றேன்
பூங்குயில்போல
பாடுகின்றேன்
இது தான் காதலா?





உன்னை கண்டபின் தெரிந்து கொண்டேன்
எனக்கும் காதல் வருமென்று







ஒரு வட்ட நிலவை
பொட்டாக்கி வண்ண
இதழ்களை
செம்பூவாக்கி
கார்மேகத்தை
குழலாக்கி எனை
காதலால் சூட வந்த
கன்னிமயில் நீதானா?





கடவுளுக்கோ
தச அவதாரம்
கண்மணி என்
காதலுக்கோ
நீதான் ஆதாரம்
ஏழ் ஏழ் பிறவிக்கும்
நீ ஒருத்திதான் காதலி
அவதாரம்



பாரச் சிலுவையை
தோளில் சுமக்கலாம்
காதல் சிலுவையை
நெஞ்சில் சுமக்கலாமோ?
தாங்காதடி என் இதயம்







உன் ஒருத்திக்காய்
மட்டும்
ஏனடி என் நெஞ்சு
இப்படி தவிக்கின்றது?
காதலா?



சொல்லாமல் என்
நெஞ்சை திருடிச்
சென்றாய்
இறக்கை முளைத்து
பறக்குதடி இள
நெஞ்சு





உலக அழகிகள்
வருடத்திற்கு ஒரு முறை
வரலாம் போகலம்
என் வாழ்வின் அழகி
காதலே
என்றும் நீதானடி








என் நெஞ்சை உன்னிடம்
விட்டு விட்டு
உன் நெஞ்சை சொல்லாமல்
எடுத்து கொண்டு போகிறேன்
காதல் கள்வனாய்



என் கருவிழிகளிலே
என்றுமே
காயாத ஈரம்
என் சின்ன இதயத்திலோ
என்றுமே மாறாத காயம்
காதலே உன்னால்



காதல் இன்பத்தை
உன்னை கண்டபோது
உணர்ந்தேன்
காதலின் கொடிய
வலியை உன்னை
பிரிந்தபோது
உணர்ந்தேன்






உன்னை கண்டபோது
உணர்ந்து கொண்டேன்
என் இதயத்தை ஈர்க்கும்
காதல் புலம் நீதான்
என்று



- கையளவு மனசுக்குள் ஏனடி கடலலவு
- காதலின் வலியை தந்தாய்?

- கண்ணீர் குளங்களை விழிகளில் கட்டிவிட்டு
- காதலின் தீராத வலியை
- நெஞ்சுக்கு ஏனடி விட்டு வைத்தாய்?





